உ
சிவகுகமயம்.

# செந்தமிழ்ப் பானு.

திருவாரூரிலிருந்து மாதம்
ஒரு முறை வெளிவருவது.


| பொய்கை க | விபவ-ஆு தை-மீ 1929-ஆு ஜனவரி-மீ | மலர் க |
|---|---|---|




பொருள் திறைவு.



பத்திராதிபர்
வை. செல்லையாச் செட்டியார்,
*தமிழ்ப்பண்டிதர்.*



வருடசந்தா ரூ. 2—0—0 | தனிப்பிரதி ரூ. 0—4—0

*கருணாநிதி பிரஸ், விஜயபுரம்.*

1929.

உதவியாளர்கள்:—

1. பெரி. பெரி. சுப. ஜகநாதன் செட்டியார்,
கண்டரமாணிக்கம்.

2. அ. அண்ணுமலைச் செட்டியார்,
அரிமளம்.

3. மு. ராம. கு. இராமநாதன் செட்டியார்,
அரிமளம்.



வருட சந்தா ரூ. ௨—0—0

ஆயுட் சந்தா ரூ. ருo—0—0

தனிப்பிரதி அணு 0—௪—0.



விளம்பர விகிதம்.

மாதம் க-க்கு பக்கம் க-க்கு ரூ. ரு—0—0

„ „ ௴-க்கு ரூ. ௨—0—0

நீண்டகாலம் விளம்பரம் வேண்டுவோர்கள் எழுதித்தெரிந்து கொள்ளல் வேண்டும்.



வை. செல்லையாச் செட்டியார்,
செந்தமிழ்ப்பானுப், பத்திராதிபர்
33, காரைக்காட்டுத்தெரு,
திருவாரூர்.

உ
சிவகுகமயம்.
திருச்சிற்றம்பலம்.

# செந்தமிழ்ப் பானு.

திருவாரூரிலிருந்து திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| பொய்கை க | விபவ-ஆண்டு தைத் திங்கள். | மலர் க |


திருச்சிற்றம்பலம்.

எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லைக்
கைப்போ தகத்தின் கழல் —

நாளென் செயும் வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங் கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

## நோக்கம்.

பாவேந்தர் போற்றிடு மூவேந்தர் ஆண்ட நந் தமிழ்நாட்டில் சங்கமருவிய அந் நாளில் சங்கப் புலவர்களையன்றிப் பிறரும் தமிழறிவு மலிந்தவர்களா யிருந்தனரென்பது கலைவல்லார் பலரும் உணர்ந்ததோர் உண்மையாம். அக்காலத்து மக்கள் சங்கநூற் பனுவல்களிற் றேற்சியும், அவற்றின் பொருள்களை எளிதிலுணரும்

ஆற்றலும் உண்டாம்படி கல்வி பயிற்றப் பெற்றிருந்தனர். கல்லாதவர் போகக் கற்றவரனைவரும் இலக்கண இலக்கியப் பயிற்சி மிக்காராகவே யிருந்தனரென்பதற்குப் பல சான்றுகளுண்டு.

இனி, சங்ககாலத்திற்குப் பிற்பட்ட இடைக்காலத்தில் சங்க நூற் பயிற்சியே யன்றி, சாத்திரநூற் பயிற்சியும்பெருகி மிளிரலாயிற்று. சாத்திர நூல்கள் பிற நூல்களினும் மிக மிகப் பொருள் நுணுக்கமுடையவெனினும் அவற்றையுந் தெளியக் கற்று வஸ்து நிச்சயமுணர்ந்த அறிஞர் பலர் பல்கியிருந்தனர்.

இக்காலத்தும் அங்ஙனங் கற்றறிந்த பெரியோர்க ளில்லாமற் போகவில்லை. ஒரு சிலரிருக்கின்றனர். ஏனையோர் சங்க நூல்களின் உரை நடைகளையும் சாத்திர நூல்களின் உரை நடைகளையும் படித்து அவற்றின் பொருளுணர வியலாதவரா யிருக்கின்றனர். தமிழ் நாட்டின் பண்டைக்காலத்து அரசியல், விளைபொருள், கைத்தொழில், உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம், மரக்கலப் போக்குவரத்து, சேனை வீரம், வெற்றி ஆதியவற்றை விளக்கும் சங்க நூல்களும் உலகு, உயிர், இறை ஆதியவற்றை விளக்கும் சமய நூல்களும், இல்லறம், துறவறம், இன்பவாழ்வு ஆதியவற்றை எச் சாதியார்க்கும் எம்மதத்தினர்க்கும், எந்நாட்டினர்க்கும் ஒப்பக் கூறும் தெய்வத் திருக்குறள் போன்ற சிறந்த நூல்களும் இந் நாளினும் பின்னாளிலும் இன்றியமையாதனவென்பது ஒரு தலை.

அங்ஙனமாக, இந்நாளில் அந்நூல்களின் உரைகளையேனும் படித்துப் பொருளுணரமாட்டாத நிலையில் தமிழ்நாட்டினரிருப்பது எற்றாலோவெனின், சில காலமாக ஊட்டப்படும் கல்வி முறையால் எனலாம். கல்லூரிகளினும், உயர்தரப் பாடசாலைகளினும் இதுகாறுந் தமிழுக்குத் தக்க மதிப்பு ஏற்படவில்லை. ஆங்கு இலக்கணமும், இலக்கியமும் நிறம்பாத கல்வியே மாணவர்கள் பெறுகிறார்கள். வசன பாடங்களுக்கும் பெரும்பான்மை மிக எளிய நடையும் எளிய பொருளும் அமைந்த நூல்களே தேர்ந்தெடுத்துக் கற்பிக்கப்படுகின்றன.

ஆகலின் அங்குக் கற்று வெளியேறுபவர்கள் உயரிய பொருளையோ, உயரிய நடையையோகொண்ட நூல்களைக் கண்டால்

தலை நடுக்கங் கொள்கின்றார்கள். அவர்களைவிட நாட்டுப்புறங்களில், ஆரம்பக் கல்வியுடன் நின்றுவிடும், மாணவர்களின் நிலை இனைத்தென எடுத்துரைக்கற் பாலதன்று.

இந் நிலையில் நஞ் செந்தமிழ் மக்களுக்கு மேற்காட்டியன போன்ற பழைய நூல்களின் அரிய பொருள்களை எளிய நடையில் சிறிது சிறிதாகப் புகட்டுவது இஞ்ஞான்று இன்றியமையாத தொன்றாம்.

இக் கடமையை மேற்கொண்டே 'செந்தமிழ்ப்பானு' உதயமாகின்றது. 'செந்தமிழ்ப்பானு' வின் நோக்கம் பிறிதொன்றன்று இவ்வழியில் 'செந்தமிழ்ப்பானு' விற்குத் தமிழ்ச் செல்வர்கள் உறுதுணையாக நின்று நாளும் நாளும் முன்னேறும் உதவியைச் செய்ய வேண்டுவது அடியேனது வேண்டுகோள்.

இங்ஙனம்,
பத்திராதிபர்.

## பிள்ளையார் நோன்பு,

##  மான்மியம். 

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ்செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை.

"அகரமென வறிவாகியுலகமெங்கு மமர்ந்தகரவுகரமகரங் கடம்மாற், பகருமொ ருமுதலாகி வேறுமாகிப் பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு, புகரில் பொருணன்கினையு மிடர்தீர்ந் தெய்தப் போற்றுநருக்கறக் கருணைபுரிந்தல்லார்க்கு, நிகரின் மறக்கருணை புரிந் தாண்டுகொண்ட நிருமலனைக்கணபதியை நினைந்து வாழ்வாம்"

சர்வலோகநாயகராகிய ஸ்ரீ சிவபெருமான், ஆன்மகோடிகளெல்லாம், இருளில் அகப்பட்டு வருந்தும் கண்களுக்கு ஒப்பாக,

ஆணவமலமென்னும் அந்தகாரத்தினால், தமது அறிவு இச்சை தொழில்கள் மூன்றும், தடையுற்று வருந்துதலை நோக்கி, அவ்வறி விச்சை தொழில்கள் விளக்கமுறுதற்கேதுவாக, முதற்காரணமாகிய மாயையிலிருந்து, தனுகரண புவன போகங்களைத் தமது சிற்சத்தி யாகிய துணைக்காரணத்தினால் தோற்றுவித்து உபகரித்தருளினர்.

அங்ஙனம், உடம்பு, அந்தக்கரண முதலியவற்றைப்பெற்றுக் கொண்ட ஆன்மாக்கள், துன்பங்களுக்கேதுவாகிய பாவங்களை வெறுத்து ஒழிக்கவும், இன்பங்களுக்கு ஏதுவாகிய புண்ணியங்களை விரும்பிச்செய்யவும், கற்பிக்கக்கூடிய வேத சிவாகம முதலிய நூல்களை நிமித்த காரணராகிய பரமேஸ்வரர் சுத்த மாயையி லிருந்து தோற்றுவித்தருளினர்.

முறையே பொதுவும் சிறப்புமாக விளங்கும், வேதங்களினும் சிவாகமங்களினும், விதிக்கப்பட்டனவாகிய புண்ணியங்கள், பசு புண்ணியமென்றும், பதிபுண்ணியமென்றும், இருவகைப்படும். இவ்விரண்டினுள்ளும் பதிபுண்ணியமாகிய சிவபுண்ணியமே சிறப் புடையதாகும்.

குறித்த பதிபுண்ணியமும் பலதிறத்தனவாம். அவற்றுள் "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கூனமில்லை" என்னுந் தேவாரச்சுருதிக்கிணங்கமனம் பொறிகளின் வழியேபுகுதாமல் ஒரு வழிப்பட்டு நின்று.

ஸ்ரீ பரமேஸ்வரர், பார்வதி தேவியார், விநாயகப்பெருமான், சுப்பிரமணியர் முதலிய மூர்த்தங்களை வழிபட்டுத் தியானித்து, இன்புறுதற்கேதுவாகிய உண்டி சுருக்கிச்செய்யும் சிவவிரத முத லானவைகளை அநுட்டித்து வருதலும் ஆவசியகமென ஏற்பட்டிருக் கின்றது.

அத்தகைய விரதங்களுள் தேவர்களும் போற்றுகின்ற விநாயக சஷ்டி விரதம், தன்னை முறையாயநுட்டிப்பவர்களுக்குச் சகல விதமான இஷ்ட சித்திகளையும் பூர்த்திசெய்யுந் தகுதியுடையதாக வமைந்திருக்கின்றது. இனி விநாயகருக்குரிய சுக்கிரவாரம், சதுர்த்தி, சஷ்டியென்பவைகளுள், சஷ்டிவிரதத்தைப்பற்றிக் காரண

கமம், ஆருத்திராவிதிப்படலத்தினும், விநாயகபுராணம், கந்த புராணம், உபதேசகாண்டமென்பவற்றினும், விளக்கிக் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விரதம் கார்த்திகை மாதத்துக் கிருஷ்ண பக்ஷத்துப்பிரதமை முதல், மார்கழி மாசத்துச் சுக்கில பக்ஷத்துச் சஷ்டியுஞ் சதயமுங்கூடிய தினம் வரையுள்ள இருபத்தொருநாட்களினும் சைவசமயிகளாகிய புருஷர்களும், பெண்களும் அநுட்டித்து வரவேண்டியதொன்றாயிருக்கின்றது.

இந்தச் சஷ்டி விரதத்தின் ஆரம்பதினத்தில் புதிய வஸ்திரங்களிலிருந்து இருபத்தொரு இழைகளை யெடுத்துச்சேர்த்து விதிப்படி ஆதி சைவர்களால் பிரதிட்டை செய்வித்துப், புருடர்கள் வலது கரத்திலும், பெண்கள் இடது கரத்திலுமாகக், கட்டிக் கொள்ளுதல் வேண்டும். அது முதல் இருபது தினங்களினும், ஆசார சீலமுடையராய் பகற்பொழுது மாத்திரம் சுத்தமான பச்சரிசி அமுது உட்கொண்டு விநாகயப்பெருமானது திவ்ய சரிதங்களைத்தக்கவர்களால் அன்புடன் கேட்டும், காலை, மாலை யிரண்டினும் சுத்தமான உடைதரித்து விநாகயரது ஆலயங்களிற் சென்று விநாயகப்பெருமானுக்குத்தமது தகுதிக்குக்குறையாமல் அபிஷேக அலங்காரங்களைச் செய்வித்தும், பஞ்சான்னம், மோதகம், எள்ளுருண்டை, அப்பம் முதலிய பலகாரங்கள், மாம்பழம், வாழைப்பழம், பலாப்பழம் முதலிய கனி வகைகள், பானகம், நீர்மோர், இளநீர், கரும்பு முதலியவைகளால் நிவேதனம் செய்வித்தும் பக்தி சிரத்தையுடன் தீபாராதனைக்காலத்தில் தரிசித்துத் திருவருளைப் பிரார்த்தித்து வருதல் வேண்டும்.

அதன்பின் இருபத்தோராவது தினமாகிய சஷ்டியுஞ் சதயமுங்கூடிய தினத்தில் உபவாசமாகவிருந்து விநாயகப்பெருமானுக்கு ஆதி சைவர்களால் விசேஷமான உத்ஸவம் நடத்தித் தரிசித்து வருதல் வேண்டும். விரத தினங்களில் விநாயகராலயத்தில் இரவு நெய் விளக்கேற்றி வருதல் பெரும் புண்ணியமாம்.

**21**-வது தினத்தில் விநாயகர் கோயிலில் விதிப்படி பூரண கும்பம் அமைத்து, வெள்ளி முதலிய வற்றால் செய்யப்பெற்ற விநாயகரது திருவுருவைப் பிரதிட்டை செய்வித்து வழிபட்டு

விரதத்தைப்பூர்த்தி செய்தல் வேண்டும். அன்று சுவாமி திருவீதி கொண்டருளும்போது பிரதக்ஷிணஞ் செய்யின், ஒரு அடிக்கு ஒரு அசுவமேதயாகப் பயன் சித்திக்கும்.

விநாயகர் விரத உத்தியாபனம் செய்து முடித்தபின்பு, கையிற் கட்டியிருக்கும் காப்பைக் களைதல் வேண்டும்.

மற்றுநாட் காலையில் நித்திய கன்மானுட்டானங்களை முடித்துக்கொண்டு மாகேசுர பூசைசெய்வித்துத், தாமுந் தமது பந்து மித்திரர்களுடன் பாரணம் புசித்தல் வேண்டும். அன்று பகல் முழுவதும் நித்திரை செய்த லாகாது. விநாயகப்பெருமானது திருவிளையாடல்களைக் கேட்டு இன்புறுதல் வேண்டும்.

முன் இந்த விரதத்தைச்சப்தமாதர்கள், விஷ்ணுமூர்த்தி, பரமேஸ்வரர், பார்வதியார் என்பவர்களும், மற்றுந்தேவர்களும், முனிவர்களும், தமதுகுறைகள் தீருநிமித்தம் அநுட்டித்து இன்புற்றனர், அந்நெறியைப்பின்பற்றிப் பிற்காலத்திலும் அநேகம் பூவேந்தர்களும், பக்த ஜனங்களும் அநுட்டித்து இன்புற்றுவந்தனர் உஜ்ஜீனி பட்டினத்துக்கு வேந்தனாகிய விக்கிரமார்க்கன், தனது குடும்பத்துடன் இவ்விரதத்தை அநுட்டித்து வந்தான். அப்பொழுது அவனது பத்தினிமாருள் ஒருத்தியாகிய இலக்கண சுந்தரி என்பவள் மாத்திரம் இவ்விரதத்தில் அன்பில்லாதவளாய்த் தான் கையில் கட்டியிருந்த 21 இழையாலாகியஇரக்ஷையை(இருபத்தொரு இழையாலாகிய காப்பை) விரதத்தின் மத்தியில் அவிழ்த்து வெளியே வீசிவிட்டனள். அவளால் எறியப்பட்ட அது பக்கத்தே கருகிநின்ற ஓர் கொவ்வைச்செடியிலே வீழ்ந்தது. அச்செடியானது உடனே மிகத் தளிர்த்துப் பூத்துக் காய்த்து விளங்கிநின்றது. அதனைக்கண்ட ஒரு மாது அதிசயித்து அந்தக் காப்பை எடுத்துத் தன் கையிற் கட்டிக்கொண்டு விதிப்படி விரதமநுட்டித்துப் பெருஞ் செல்வம் பெற்றனள். இலக்கண சுந்தரியின் அகந்தையையும், அன்பின்மையையும்பற்றி, அன்று இரவு விநாயகப்பெருமான் அரசனது கனவிற்கூறி மறைந்தனர். அரசனவளை இராச்சியத்தினின்றும் அப்புறப்படுத்திவிட்டனன். அதனாலவள் சார்ந்த சார்ந்த இடங்களிலுள்ளவர்கட்கெல்லாம் அளத்தற்கரிய விக்கினங்

களுண்டாயின. அதனால் யாவருமவளை வெறுத்து விலக்கி வந்தார்கள். அப்பொழுது அப்பேதையடைந்த துன்பங்கட்கு அளவுகூற வியலாது, இவ்விதமாக அம்மாது பலகாலம் அல்லற் கடலுள் மூழ்கி வருந்தினள். இறுதியில் அவ்விலக்கண சுந்தரி ஔவைப்பிராட்டியாரது திருவடிகளையடைந்து தனது துயரங்களை யெல்லாம் விளம்பினள் இவள் அங்கு வந்து சார்ந்ததனால் ஔவையாரை அதுவரை யன்புடன் புகழ்ந்து போற்றிவந்தவர் களும் நிந்திக்கத் துணிந்தனர். அதன் காரணமியாதென ஔவை யார் சிந்தித்த பொழுது, விக்கினேஸ்வரரது விரதத்தை யவமதித்த பாதகியாகிய இலக்கண சுந்தரி தன்னிடம் வந்து சார்ந்ததே யெனத்தெரிந்தார். யாதொருகெதியுமின்றி வருந்துமிப் பெண் கொடியின்மீது ஔவையார் இரங்கி அபயங்கொடுத்து அவளை மீட்டும் விநாயகசஷ்டி விரதத்தை விதிப்படி யனுட்டிக்கச்செய்து விரதத்தைப் பூர்த்தி செய்தனர். அந்த விரதத்தின் பெருமை யால் இலக்கண சுந்தரி விநாயகரது திருவருளுக்குரியளாய் ஔவை யாருடன் சின்னாள் வசித்து வந்தனள்.

அங்ஙனம் அங்கு வசித்து வருங்காலத்தில், விக்கிரமார்க்க வேந்தன் தற்செயலாய் வேட்டைக்குச்சென்று மீளும்போது, மிகத்தாகமுடையனுய்த்தனது பரிவாரங்களுடன் ஔவையாரது ஆச்சிரமம் வந்து சேர்ந்தான். அதனையுணர்ந்த இலக்கணசுந்தரி ஒரு சிறு பாத்திரத்திற் ஜலங்கொடுத்தனள். அது எத்தனைபேர் பருகியும், பாத்திரஜலங்குறையாது நிறைந்து விளங்கினது. அத னைக்கண்டு அரசன் ஆச்சரியமுற்று, ஔவையாரை வினவினன். அதற்கு ஔவையார் அவளது வரலாற்றையெல்லாம் விளக்கியரு ளினர். அதனால் அரசன் தன்னால் விலக்கப்பட்ட தன் பத்தினியே யிவளென்றறிந்து தன்னுடனழைத்துக்கொண்டு சென்று முன்னை யினும் பன்மடங்கான சுக வாழ்வெய்தியிருந்தனன்.

சில நூற்றாண்டுகளுக்கு முன் காவிரிப்பூம்பட்டினத்தில் வசி த்துவந்த, நமது முன்னோர்களாகிய வைசியர்கள், தமக்குத்தெய்வீ கமாகக்கிடைத்த, மரகத விநாயக மூர்த்தியைச் சிவாகமமுறைப்படி பக்திசிரத்தையுடன் வழிபட்டு விநாயக சஷ்டிவிரதத்தையும் விடாது மிகுந்த சிரத்தையுடன் அநுஷ்டித்து வாழ்ந்து வந்தனர்.

அவர்கள் அவ்விதம் வாழ்ந்துவருங் காலத்தில் ஓர் அரசன் செங்கோலின் முறையைக்கைவிட்டுத் தன் மனம்போனவாறு குடிகளை நடத்தத் துணிந்தான். அதனைச் சகிக்கலாற்றாத வைசியர்கள் அவ்வரசனது நாட்டைவிட்டு வெளியேறிப் பற்பல இடங்களிற் சென்று குடியேறி அச்சமயம் தமக்கு உதவிபுரிந்துவந்த உத்தமர்களிடத்தே அத்தியந்த விசுவாச முடையவராயிருந்து சிறப்புற்று வாழ்ந்து வந்தனர். அதன்பின் அவ்வுத்தம வைசியர்களது சந்ததியார்களாக இப்பொழுது பற்பல இடங்களிலும் வியாபித்திருக்கும் நம்மவர்கள் அனைவரும் மேலே கூறிய விரதத்தை "செய்வன திருந்தச் செய்" என்னுந் திருவாக்குக்கு இலக்கியமாய், சிவாகமங்களுக்கும், சிவபுராணங்களுக்கும் இணங்க அநுட்டித்து, நமது ஆத்மநாதராகிய ஸ்ரீ விநாயகப் பெருமானது திருவருளைப் பூரணமாய்ப்பெற்று, சிவபுண்ணிய பரிபாலன தருமங்களைமேலுமேலுஞ் செழித்தோங்கச்செய்து, அஷ்டைஸ்வரிய சம்பன்னர்களாய் வாழ்ந்து இன்புற்று விளங்கும் வண்ணம் ஸ்ரீ விநாயகப்பெருமானைப் பிரார்த்திக்கின்றனம்.

இவ்விரதம் யாழ்பாணத்திலே 21-தினங்களிலும் ஆங்குள்ள புருடர்களாலும் பெண்களாலும், விதிப்படியநுட்டித்து வரப்படுகின்றது. அந்த முறையையே சைவர்களனைவரும் பின்பற்றவேண்டிய உரிமை உடையர்களா யிருக்கின்றார்கள். சுபம்

இந்த விரதத்தைப்பற்றி அகத்தியனார் அருளிச்செய்த "பிள்ளையார்கதை" யெனஓர் நூல் அகவற்பாவாக அமைந்திருக்கின்றது.

'வின்னுமம் புகல்கின்ற திங்கடன்னின் மிக்கமதிதனி னாரம்பக்க மாகும், இன்னுளிலியா னுன்னையருச்சித்திட்டி யியற்கைபோலியாரு மினி யீறிலாவுன், பொன்னுரு மலரடியே புகலென்றுன்னிப் பூசை புரிந்திடவுமவர் புன்கணெல்லா, மன்னுளேயகற்றிநீயுலாவாச்செல் வமளித்தருள வேண்டுமிஃதருள்கவென்றான்" சந்தபுராணம்.

"இற்றை நாளெனு மார்கழிச் சஷ்டியி னெளியேற்
குற்ற நீநல முதவிய சிறப்பினுலிசனி ன்
மற்றுமாண்டுகடொறு நினை வழிபடு வார்கட்
கற்றநீக்கி வேண்டிய பொரு ளளித்தரு ளென்றான்"

" இதனை மார்கழித் திங்களிற் சஷ்டியி னிசைத்த
விதி வழுக்குறு தன்பொடு நோற்பது விதியா
னுதிகொள் வேற்படை வச்சிர மாலிநோற் றடுத்த
முதிர் பெரும்பிணிச் சாகரங் கடந்தனன் முன்னாள் "

" அன்றி மைந்தரிற் சிறந்தன னவனி காத்தளித்து
வென்றி வெண்குடை விளங்கினன் மென்மருங் கனுக்குங்
குன்ற வெம்முலைத் திலோத்தமை மனையெனக் கொண்டான்
என்று மீறிலாக் கயிலைபெற் றிருந்தன னின்னும் "

வாழ்த்து.

" வான்முகில் வழாதுபெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசுசெய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்களோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக வுலக மெல்லாம் "

**சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தார்,**
**தேவகோட்டை.**

---

# திருவள்ளுவரும்–வீட்டுப்பாலும்.

திருக்குறளின் அருமையும், திருவள்ளுவ தேவரின் பெருமையும் உலகம் அறிந்தது. அவ்வருமை-பெருமைகள் எவராலும் அளப்பதற்கொவ்வாதன. நாயனார் தம் வாக்கால் ஓதிய நீதிகளைச் செயலாலுங் காட்டியதே அவரது பெருமைகளை எவரும்கொண்டாடுதற்குரியதாயிற்று. துறவறத்தை விதந்து கூறிய நாயனார் இல்லறத்தின்கண்ணே நின்று செந்நெறி தவறாதொழுகியது இல்லறத்தினின்றே பிறவிப் பெருங்கடல் நீந்தலாமென்பதை உலகினுக்குக் காட்டியதாயிற்று. சில ஞானக்கள்ளர்கள் துறவறம் புக்கும், இறைவனடி சேர்வதற்கு இயைவன செய்தலிற் றவறிழைத்துத் தாழ்வுறுவர் நாயனார் மனைக்கண் வாழ்ந்தே போற்றப் பெறுஞ் செயலில் தலை

சிறந்தமை அவர் தம் மெய்ஞ்ஞானத்தைத் தெற்றென விளக்குகின்றது. 'இழை நக்கி நூல் நெருடும்' நெய்தற்றொழில் இயற்றி அதனால் வரும் பொருளைக்கொண்டு அவர் வாழ்ந்த வாழ்க்கையை உற்றுநோக்குவார் எந்நிலையராயினும், அவர்க்குத் தங்கள் தங்கள் தொழிலைச் செய்து உயிர்வாழ்வதே மேலான ஒழுக்க மென்பதும், உழைப்பின் பெருமை எத்தகையதென்பதும், யாவரிடத்தும் அன்புபூண்டொழுகுதலே உயரிய அறமென்பதும் மனத்துறவடைந்து முழுமுதற் கடவுள்பால் பேரன்பு முதிர்ந்து நிற்கும் பக்குவநிலை இன்னதென்பதும் புலனாகும்.

சந்திரனிடத்து முயற்கறை யிருத்தல்போன்று பொறிவாயில் ஐந்தவித்த பெரியாருக்கும் சிலகுற்றங்கள் இருப்பது இயற்கை யென்னும் உபசாரக் கூற்றுக்கு இடனின்றி, எவ்விதத் தீங்கினையும் நினைத்தலுஞ் செய்தலுமின்றி, எவ்விதப் பற்றுக்களையும் விட்டு, எவ்வுயிரிடத்தும் அன்புபூண்டொழுகிய அருமையினும் அருமையாகிய செயல்கள் நம் நாயனாருடையது. ஒழுக்கத்தாற் சிறந்த நம் நாயனார் இழிகுலத்திற் பிறந்தாரெனக் குலம்பேசுவோர் கூறினும் அவரையும் திருக்குறளையும் பாராட்டி,

"அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடையார்" என மாமூலனாரும்,

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
றான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்கச் சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்கக் கேட்கச் செவி என உக்கிரப்பெருவழுதியாரும்,

இன்னும் நாயனார் காலத்துப்பெரும்புலவர் பலர் பலவாறாகவும் போற்றியுள்ளார். ஆங்கிலம், பிரஞ்சு, லத்தீன், கிரீக், கிபுரோ முதலிய தற்கால, முற்கால ஐரோப்பிய நாட்டு மொழிகள் பலவற்றிலும் புலமை வாய்ந்த போப்பையர் எனும் பெரியார் "இந்நூல் எம்மொழியினும் ஒப்புயர்வற்றது" எனக் கூறியிருக்கின்றார்.

எத்தனையோ மொழிகள் அரசுரிமைபெற்று நிலவும் இக்காலத்திலும் இத்திருக்குறள் பெரும்புகழ் பெறுமெனின் இது பிறந்த காலத்துள்ள சங்கப்புலவர்களால் போற்றப்பட்டதில் என்ன வியப்பு? இந்நூல் சொற்சுவை—பொருட்சுவை மலிந்துகிடப்பதோடன்றி எல்லாச் சாஸ்திர நூல்களின் சாரமாயும், எல்லாச்சமயிகட்கும் சம்மதமாயுமுள்ள பெரும் பெற்றித்து. இதனை,

ஒன்றே பொருளெனின் வேறென்பர் வேறெனின்
அன்றென்ப ராறு சமயத்தார்—நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி என்ற

கல்லாடர் மொழியே வலியுறுத்தும். ஆகவே தொன்றுதொட்டு எல்லாச் சமயிகளும் தம்மவரென நம் நாயனாரைக் கருதி அன்பு பாராட்டுவாராயினர். ஆதலால் நாயனார் மொழி பொய்யாமொழியென்பதும், களங்கமற்றதென்பதும், ஒப்புயர்வற்ற நீதி நூலென்பதும் பெறப்படும்.

இங்ஙனம் ஒருவாற்றானுங் குறைபாடில்லா இத்திருமறையில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் ஆகிய முப்பால் மொழிந்ததன்றி வீட்டுப்பாலைப்பற்றி ஆசிரியர் கூறினாரில்லையெனப் பலர் பேசுவர். வீடு, சிந்தையும், மொழியும் செல்லா நிலைமைத்து என்பதை யேற்பினும், வீடென்பது ஒன்றுண்டோ? அதையடைபவன் யாவன்? அடையும் வழியாது? எனும் வினாக்களுக்கு விடைபிறக்கும் நூல்களே வீட்டுப்பால் கூறும் ஞான நூல்களாகும். நாயனார் வெளிப்படையாக மேற்காட்டிய வினாக்களை எழுப்பி விடைபகரும் பகுதியொன்று அமைத்திலரேனும் குறிப்பாகக் கூறியிருக்கின்றனர். இவ்வுண்மையை,

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானா வறமுதலா வந்நான்கு—மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று என நக்கீரரும்,

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாட்டினான்
முப்பாலி னற்பான் மொழிந்தவ—ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர் என சீரந்தையாரும்,

அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை. என மாழலனாரும்

"பெறவறிந்த நாலு மொழிந்த பெரு நாவலவர்" எனவும் இன்னும் இக்கருத்தமைத்துப் பலபுலவர்கள் கூறிய மொழிகளும் அறிவுறுத்தும்.

இதுகாறும் காட்டிய வாற்றால் பொதுவாக வீட்டுப்பாலையும் நாயனார் திருக்குறளில் அடக்கியுள்ளார் என்பது போதருகின்றதாயினும் எவ்வெவ்விடங்களில் எவ்வெக் கருத்துக்களைத் தழுவி அமைக்கப்பட்டிருக்கிறதென்பதையும் ஆராய்வாம்.

கடவுள் வாழ்த்தாகக் கூறிய முதலதிகாரத்தில் இறைவன் உண்டென்பதும், இறைவன் இலக்கணமும், வினைக்கொடுமையும், வீடடைய விரும்புவான் இலக்கணமும், அடையும்வழியும் விரித்துக் கூறப்பட்டுள்ளன.

கடவுள் உண்டோ என்று ஐயுறுவாரை முதற்குறளில் "ஆதி பகவன் முதற்றே யுலகு" என்னும் சொற்றொடரால் (காணப்படுவதாகிய உலகம் ஒருவனால் படைக்கப்பட்டிருக்க வேண்டும் என்னும் ஏதுவாயிலாக) இறைவன் உண்டென்று நிலைநாட்டித் தெளியவைத்தார். கடவுள் ஆதியும், அந்தமும் இல்லாதவராதலால் இங்கு ஆதியென்ற சொல் உலகத் தோற்றத்துக்குக் காரணமானவன் என்பதைக் குறிப்பதாம். "போற்றி யருளுக நின்ஆதியாம் பாதமலர்" என்பதினும்,உலகத்தோற்றத்துக்கு ஏதுவாகிய பாதங்கள் என்னும் கருத்தே அமைந்து கிடக்கின்றது. நிற்க, உலகு என்னும் சொல் ஈண்டு உயிர்கள்மேல் நின்றதென பரிமேலழகியாருங் கூறினர். எனவே "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்னும் இத்தொடரில் முழுமுதலும், அம்முழுமுதற் கடவுளிடத்துத் தோன்றிய உலகுயிர்களும் உண்டென்பது பெறப்பட்டது.

இனி, உலகுயிர்கட்கும், இறைவனுக்குமுள்ள சம்பந்தம் இத்தகையது என்பதையும், இறைவனது முதன்மை இத்தன்மைத்து என்பதையும் "அகர முதல எழுத்தெல்லாம்" என்னும் தொடரில் அடக்கினர். அவற்றை ஆராய்வாம். அகரம் எங்ஙனம் ஏனையெழுத்துக்களுக்கெல்லாம் இன்றியமையாத முதன்மைவாய்ந்த உயிர் எழுத்தா யிருக்கின்றதோ அதேபோன்று இறைவன் எல்லா உயிர்கட்கும் உயிராவன். உலகுயிர்கள் மெய்யெழுத்துக்கள் போல இறைவனுக்கு உடல் ஆகும். உலகு, உயிர் ஆகிய இரு பொருள்களும் இறைவனுக்கு உடலாகுந்தன்மையால் உலகினை ஒன்றுபடுத்திக் கூறினர். இவ்வெடுத்துக்காட்டல் பகவனுக்கும், உலகுக்குமுள்ள தொடர்பு இனைத்தென உய்த்துணர வைத்தார். இறைவனும் உலகுயிர்களும் ஒன்றோ, இரண்டோ, அன்றோ என்பதுபற்றி ஒன்றுங்கூறாது அவற்றின் சம்பந்தம், உயிரும்—உடலும் போலுமெனக் குறித்தார்.

உயிரெழுத்து நாதமாத்திரையாய் இயல்பாற்றோன்றித் தானே ஒலிக்கும் ஆற்றலுளது. மெய்யெழுத்துக்கள் உயிரொடு கூடியன்றி தன்னியற்கையால் ஒலிக்கும் ஆற்றலிலாதன. உதாரணமாக க்-அ என்னும், மெய்யும் உயிரும் கூடினாலன்றி ககர ஒலி எழா. ககர மெய் அதாவது -க்- மட்டும் ஒலிக்கவேண்டுமெனினும் -இக்- என்று இகர உயிர் பெற்று ஒலித்தலேயன்றி தனித்தொலித்தலின்று. அம்மட்டின்றி உயிரெழுத்தினின்று மெய்யெழுத்துப் பிறப்பதும், உயிரெழுத்துக்களின் துணையின்றி மெய்யெழுத்துக்கள் இயங்குவதும் இல்லாத ஒன்றிரண்டற்ற தன்மையை நன்குணர்ந்த நம் பெரியோர்கள் எழுத்துக்களை மெய்யென்றும், உயிரென்றும் பெயரிட்டுப் பிரித்திருப்பதன்றி இறைவனுக்கும், ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பினுக்கு மேற்கோளாகவும் எடுத்தாண்டனர். ஆகவே இவ்வுதாரணம் "ஒன்று நீயல்லை அன்றியொன்றில்லை" என்னும் கொள்கையை விளக்குவதாகின்றது. மேற்காட்டியவாறு அகர உயிர் மற்ற எழுத்துக்களுக்கெல்லாம் இன்றியமையாதென்பதனை "அகரவுயிரின்றேல் அக்கரங்களின்றாம்" என்னும் மெய்கண்டார் வாக்கும் வலியுறுத்தும்.

இனி, இறைவனே எல்லாவற்றிற்கும் உயிரென்றதனுலும், ஆக்கல், காத்தல், அழித்தல் முதலிய தொழில்வன்மை யுண்மையானும் எல்லாவற்றையும் இயக்குபவன், இயற்கையறிவன், முற்றறிவன் என்பது பெறப்பட்டது. இதனுனேஉலகுயிர்கள் இறைவன் சந்நிதி முன்பு அசைவித்தாலன்றி அசையா; அறிவித்தாலன்றி அறியா. அறிவற்ற அசேதனங்கள் போலாகும். உண்மையறிவை யூட்டுவோனும், உண்மை இன்பத்தைக் காட்டுவோனும் இறைவனுகும். இதுபற்றியே இறைவனை மெய்யுணர்வுடையான் எனவும், பிறவியை அறுத்தொழித்து வீடுபேறு தரும் இறைவனது திருவடிகளை வாழ்த்தி வணங்காத உயிர்களின் கல்வியறிவைப் பயனற்றதாகவும் குறித்து,

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றுள் தொழா அ ரெனின்—என ஓதினர்.

அவனருள் கொண்டு அவன்றுள் வணங்கும் அரும் பேறுபெறுக் கல்வியறிவு பயனற்றது. எனவே, இறைவன் பெருமையும், உயிர்களின் சிறுமையும் இத்துணைத் தென்பது தெளிவாம்.

இனி, சிற்றறிவுடைய நாம் முற்றறிவுடைய முதல்வனை அறிந்தடைவதெப்படியென ஆராயின் இறைவனது மற்றெருதன்மையால் அது எளிதாம். இறைவன் அன்பொடு நினைப்பவர் நெஞ்சமே கோவிலாக் கொண்டுறைபவன், இறைவனும், அன்பும் வெவ்வேறன்று. இறைவன் தம் மெய்த்தொண்டர்கள் நினைக்கு முன்னமே ஓடோடியுஞ் சென்று சேர்ந்து அவர்கள் துன்பத்தை நீக்கி இன்பத்தை அருளுவன். இதனை மூன்றுங்குறளில் 'ஏகினுன்' என்ற சொல்லால் அறிவுறுத்தினுர். இவ்வுண்மையை அழுதடியடைந்த அன்பராகிய மணிவாசகப் பெருமானுர் அருளிய

"ஆரானும் காண்டற்கரியன் எமக்கெளியன்"

"தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்கும் தன்மையினுன்"

"அன்பார்க்கு மெய்யன் அல்லாதார்க்கு அல்லாதான்"

என்னும் திருவாக்குகளே வலியுறுத்தும்.

தலைவன் இங்ஙனம் விரிந்த பேரறிவனாகவும் பெருங்கருணைத் தடங்கடலாகவும் இருப்ப, உயிர்கள் பிறந்து இறந்துழன்று அவதிப் படுவானேன்? அங்ஙனம் அவதிப்படுமாறு உயிர்களை விடுவானேன்? எனின், இறைவன் செயல்களெல்லாம் ஆன்ம ஈடேற்றத்தின் பொருட்டேயன்றித் தன்பொருட்டன்று. ஆக்குவாய் - காப்பாய்-அழிப்பாய் - அருள்தருவாய்'' என்னும் வாதவூரடிகள் வாக்கும் படைத்தல்-துடைத்தல் ஆகிய செயலெல்லாம் முடிவில் அருள்தரற் பொருட்டே என்பதனை அறிவுறுத்துகின்றது.

இறைவன் எப்பற்றும் அற்றவன், விருப்பு, வெறுப்பு அற்ற வன். விருப்பு-வெறுப்பு உண்டெனின் நல்வினை, தீவினைகளும் உண்டு. மக்கள் விருப்பு-வெறுப்பு உடையராதலால் இருவினை வாய்ப்பட்டுப் பிறவிப் பெருந்துன்பத்தின் மாழ்கி அழிகின்றனர். இவ்வினைகளை ஒழித்து, இன்பத்துள் திளைத்தற்கு ஏதுவாகிய தம் குஞ்சித பாதத்தை இறைவன் உயிர்கட்குக் காணியாட்சியாக வைத்திருக் கின்றார். இவ்விருவினைத் துன்பம் வினையிலியாகிய இறைவனது அடியாம் காணியாட்சியை அடைதலாலேயே அறுமென்பதனை,

வேண்டுதல் வேண்டாமை யிலான் அடிசேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை யில என்னும் குறளால்

விளக்கினார்.

மக்கள், விருப்பு - வெறுப்பு உற்று வினைகொண்டு வருந்துவ தெல்லாம் ஐம்புலப்பகைஞர் வழியாலேயே. ஆகலின் ஐம்பொறி வாயில்களை அடக்கின் அடைத்தவுடன் இருவினையுமனுகா தூயவர் ஆவோம். மலபரிபாகம் எய்தும். ஐம்பொறி வாயில்களை அடைத் தல் எங்ஙனம்? புலன் பொறி யாவும் இறைவனிடத்து ஒப்படைத்து அவனை நினைத்து வாழ்த்தி, அவன் ஆணைவழி நிற்ற லொன்றாற் றான் அது கைகூடும். அங்ஙனம் நிற்பாரே பேரின்பத்தில் நிலை நின்று வாழ்வார். இதனை,

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். என்னுங் குறளாற்

குறித்தார்.

இனி, பலகடவுளருண்டே. அவர்களுள் எவ்வரை வணங்குவது? எவ்வரை வணங்குவதால் சிதையா இன்பப் பெரும்பேறுகிடைக்கும்? வறியாறை வறியாரடைதலால் வரும்பயனென்? தூர்வாசருடைய சாபமொழியால் வறுமைத் துன்பெய்திய தேவர்கள் பொருளை நாடி மலையிலும் - கடலிலுமுள்ள நிலையியற்பொருள், இயங்கியற் பொருள்களின் துன்பத்தை ஒருசிறிதுங் கருதாது, அவற்றை வருத்தித் திருப்பாற்கடல் கடைந்தனர். அவற்றிற்கு இடுக்கண் செய்தலால் தோன்றிய பாவமே நஞ்சமாகத் திரண்டு தொடர்ந்து அவர்களைச்சுட, அதனையாற்றாது வருந்தி, முழுமுதலே! எங்கள் இடுக்கணைத் தீர்த்தருள்க வென்று முறையிட்டனர். தாயினுமிக்க அன்புடைய இறைவன் தேவர்களின் முற்றறிவற்ற செயலால் விளைந்த நஞ்சைத் திரட்டியுண்டு, தம் மணிமிடற்றில் அடக்கி, அவர்களின் மிடியையுந் துன்பத்தையும் தீர்த்தருளினார். இங்ஙனம் தம்மை யொருக்காலேனும் உளங்கனிந்து நினைப்பவர்தம் வறுமையையும், துன்பத்தையும் நீக்கியருளும் பருகற்கினிய பரங்கருணைக் கடங்கடலாம் பெருஞ்செல்வனையே அடைதல்வேண்டும். அவனை யடைந்தாற்றான் மனக்கவலை யெல்லாம் ஒழியும். இதனை,

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது என்பதால் உணர்த்தினார்.

இறைவன் கருணை யின்பக் கடலென்பதும், அடியாரெவரும் உருகிப்பருகி உளங்குளிர முழ்குதற்கேற்ற அறவோன் என்பதும், தமதன்பரனைவருக்கும், ஓரவாரமின்றி ஒப்ப அருளுந் தன்மையன் என்பதும், அவ்வின்பக் கடலிற்புக்குத் திளைத் தாலன்றித் துன்பக் கடல்கடக்க வியலாதென்பதும்,

அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது என்ற குறளால் எடுத்துக்காட்டினார்.

இவ்வாறு மேற்காட்டிய குறள்களால் இறைவனது (—தன் வயத்தனாதல் - தூயவுடம்பினனாதல்—இயற்கை யுணர்வினனாதல்—முற்றுமுணர்தல்—இயல்பாகவே பாசங்களினீங்குதல்—பேரருளுடைமை—முடிவிலாற்றலுடைமை—வரம்பிலின்பமுடைமை ஆகிய)

எண்குணங்களையும் விரித்துக் காட்டியதோடு, முதற்பாவால் இறைவனுண்மையும், இறைவனுக்கும் உலகுயிர்கட்குமுள்ளசம்பந்தமும், மற்றைப் பாக்களால் பதி-பசு-பாச இலக்கணங்களும் கூறி,

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
றாளை வணங்காத் தலை

எனக் கூறுமுகத்தால் எண்சாண் உடம்பிற்கும் தலையே தலைமையதாதலின் எண்குணத்தான் தாளைவணங்காத் தலையேயன்றி, அத்தலையிலமைந்துள்ள இறைவனைத் தரிசியாக் கண்களையும், இறைவன் புகழ் கேளாச் செவிகளையும், இறைவன் புகழ் பேசா வாயினையும் குணமில வென்றார். எனவே நினையாமனத்தையுங் கூட்டிக்கொள்ளலாகும்.

மேற்காட்டிய 3முதல் 9வரையிலுள்ள பாக்களால் இறைவனை அடையும் வழி வகையுங் கூறினர். கூறியாங்கு இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடல் நீந்தாரெனவும், சேர்ந்தார் நீந்துவரெனவும் முடிவாகக் கடைப்பிடித்தார்.

மேல், உயிர்கள் சிற்றறிவினராதலும், அதனால் நல்வினை, தீவினை மருவுவதாலும், அவ்வினை மருவுதற்கேதுவாகிய விருப்பு, வெறுப்பினை ஒழித்தாலன்றிப் பிறப்பு—இறப்பு அற்று ஓரேநிலையினின்று ஆனந்தித்தற்குரிய பேறு, அதாவது வீட்டின்பம் கைவராதென்பதும்,

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்

என்ற துறவதிகாரக் குறளால் நிலையிட்டார்.

உயிர்களின் சிற்றறிவே—அஞ்ஞானம், அவிச்சை, மயக்கம், ஆணவம் என்னும் பெயர் பெறும். அதுவே பிறவித் துன்பத்துக்கு முதற்காரணமாயுள்ளது. அதனை நீக்கிக் கொள்வதற்கு உபாயம், "எல்லாப்பொருள்களையும் பற்றி நின்றே பற்றற்றானயிருக்கும் இறைவனருளிய வீட்டு நெறியைப்பற்றி நின்றொழுகுவதே" என்னும் முடிவான கருத்தை

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" எனும் பாவால்
வெளியிட்டார்.

மெய்யறிவு உண்டானலன்றி இறைவனருள் சித்தியாது. இறைவனருளின்றி மெய்யறிவுசாராது. பதிஞானமின்றிப் பாச நீக்கம் பெறுதல் சமையாது. ஆதலாற் பதிஞானந் தருமாறு இறைவனை மனம்—மொழி—மெய்களால் எக்காலமும் வேண்டி, அவனருளாலே அவன்றாள் வணங்கி உய்தல் வேண்டும் என்பவைகளை ஆசிரியர்,

"இருள் நீக்கி யின்பம் பயக்கும்"
"சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின்"
பிறப்பென்னும் பேதமை நீங்க" என்னுங்
குறள்களாலும் வெளியிட்டார்.

அதனை மேலும் வலியுறுத்தவே,

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு" எனும்

மெய்யுணர்தல் நான்காம் குறளையும் எதிர்மறையா வியம்பினர். அதாவது ஒருவன் புலன் வழிஎல்லாம் அடைத்து, மனம் ஒரு வழிப்பட்டு நிற்கும் ஆற்றல்சால் அறவாழியந்தணனுயினும் (பதி ஞானம்) மெய்யறிவு இலனெனின் வீடு பேறடையான் என்பதாம்.

நாயனர் இங்ஙனம் வீட்டுப்பாலே முப்பாலுள் அடக்கிக் கூறியிருக்கும் தன்மையும், அவ்வாறு கூறிய குறட்பாக்களை சைவசித்தாந்த நூலாசிரியர்கள் பொன்னேபோற் போற்றி எடுத்தாண்டிருப்பதோடு, அவ்வாசிரியர்கள் கூறிய சித்தாந்த சாரமும், நாயனரது வீட்டுப்பாலும் ஒரேகருத்தைத் தழுவிய தென்பதும், அன்றி எல்லாச்சமயிகளும் ஒத்துக்கொள்ளும் தகுதி சான்ற பொது நூல் கூறிய சைவப்புலவர் நம் நாயனர் என்பதும் ஊன்றி உற்றுநோக்குவார்க்குத் தெற்றென விளங்கும்.

அன்பர்காள் ! இறையருள் கூட்டுவிக்கும் வீட்டுப்பால் கூறும் அறிவு நூலாகவும், அறம், பொருள், இன்பம் கூறும் உலக நூலாகவும் உள்ள பொய்யா மொழியாம் திருக்குறள் வேதத்தை ஆழ்ந்தாராய்ந்து, அதிற் கூறும் நீதிநெறிகளைக் கடைப்பிடித்தொழுகி, இம்மை இன்பங்களையும், மறுமையில் வரம்பிலின்பப் பிறவாப் பெரும்பேறையும் பெற்றுக்கடைத்தேறுவோமாக. இவ்வொரு நூலை ஐயந்திரிபு அற ஓதி உணர்வதால் எல்லாத் தமிழ் நூல்களினுடைய சாரங்களையும் நுகர்ந்தார்போன்ற ஆற்றலுடையவராவோம். உவமையிலியாகிய உமைபாகன் இவ்வூக்கத்தை அடியேங்கட்குத் தந்து அருள்புரிவாராக.

து. சுப்பையா பிள்ளை,
ஆலங்காடு.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# மகா சிவராத்திரி.

**இஃது அனுட்டிக்கவேண்டிய தினம் நாளது விபவ வருடம் மாசி மாதம் 26௳ சனிக்கிழமையாதலால் அனுட்டிக்கும் அன்பர்கட்குப் பயன்படுமாறு இவ் வியாசம் பிரசுரிக்கலாயிற்று.**

(முன் இவ்வியாசம் தேவகோட்டைச் சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால் வெளியிடப்பெற்றது.)



ஓங்குமொரு மருப்பானை யுயிர்க்குயிரா யிருப்பானை யுரகவேந்தன்
றாங்குநெடு நிலத்தானை முகத்தானை வதைத்தானைச் சயிலமானைப் [டுப்
பாங்குவைத்து மழுத்தானை பரித்தான்றந் தளித்தானைப் பசும்பொற்றோட்
பூங்கமலப் பதத்தானைப் பொருவிலைந்து கரத்தானைப் போற்றல்செய்வாம்.

"பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுழி
யங்கவர் வெருவர வங்கியா யெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்."

சிவராத்திரியென்பது சிவனது இராத்திரியென்று பொருள்படும். அஃதாவது ஓர் பிரளயத்திரவில், நான்கு யாமத்தும்

உமாதேவியார் ஸ்ரீ சிவபெருமானை சிவாகம விதிப்படி பூசித்தனர். அப்பொழுது சிவபெருமான் பிரசன்னராய்க் காட்சிகொடுக்க அப்பெருமானை தரிசித்த உமாதேவியார், தாம் பூசித்து அனுக்கிரகம் பெற்ற அவ்விரவை, ஆன்மகோடிகள் உய்தற் பொருட்டோர் விசேட தினமாய்க் கொண்டருளவேண்டுமெனப் பிரார்த்திப்ப, அதனைத் திருச் செவியேற்றருளிய இறைவரும், அவ்வண்ணம் ஓர் விசேடதினமாகக் கொண்டருளியதும், பின்னோர் காலத்தில் பிரம விட்டுணுக்களிருவருந்தாம்தாமேபரம்பொருளென்று பெரும்போர் புரிந்து கேடு விளைத்து அழிதற் குரியராய் வருந்தக் கருணாசாகரராகிய சிவபெருமான் அவ்விருவருக்கும் மத்தியிலோர் அழற்பிழம்பாய் தோன்றி காட்சி கொடுத்தருள, தங்களைப்போல் ஆன்மகோடிகளும் ஈடேற்றமடைவதற்கு யேதுவாக ஓர் விசேட தினமாகக் கொண்டருளுமாறு அவர்கள் பிரார்த்திப்ப, அதனைத் திருவுள்ளம் ஏற்றருளிய அவ்விறைவர் ஓர் விசேடதினமாகக் கொண்டருளியதும் இச் சிவராத்திரி தினமேயாகும்.

இதற்குப் பிரமாணம் உபதேசகாண்டம்.

இச் சிவராத்திரியானது மாகசிவராத்திரி, யோக சிவராத்திரி, நித்தியசிவராத்திரி, பக்ஷசிவராத்திரி, மாதசிவராத்திரி என ஐந்து வகைப்படும்.

1. மாக சிவராத்திரியாவது :—மாசி மாதத்துத் தேய்பிறைச் சதுர்த்தசித் தினமாம். இதனை வருட சிவராத்திரி, மகாசிவராத்திரி யென்றுஞ் சொல்லுவர்.

2. யோகசிவராத்திரியாவது :—சோமவாரத்தன்று சூரியோதயமுதற்கொண்டு இராத்திரி முழுவதும் சதுர்த்தசி இருக்குமாயின் அது யோக சிவராத்திரியாம்.

3. நித்திய சிவராத்திரியாவது:—பன்னிரண்டு மாதங்களிலும் வளர்பிறை-தேய்பிறைகளில் வருகிற சதுர்த்தசி கூடிய இருபத்து நான்கு தினங்களுமாம்.

4. பட்சசிவராத்திரியாவது :—தை மாதத்தின் தேய்பிறைப் பிரதமை முதல் பதின் மூன்று நாளும் ஒரு பொழுதுண்டு, பதி

ஞன்கா நாள் சதுர்த்தசியன்று விரதம் அநுட்டிப்பதாம்.

5. மாத சிவராத்திரியாவது :—மாசி மாதத் தேய்பிறைச் சதுர்த்தசி, பங்குனி மாத வளர்பிறை திருதியை, சித்திரை மாதத் தேய்பிறை அட்டமி, வைகாசி மாத வளர்பிறை அட்டமி, ஆனி மாத வளர்பிறைச் சதுர்த்தசி, ஆடி மாதத் தேய்பிறை பஞ்சமி, ஆவணி மாத வளர்பிறை அட்டமி, புரட்டாசி மாத வளர்பிறைத் திரயோதசி, ஐப்பசி மாத வளர்பிறைத் துவாதசி, கார்த்திகைமாத வளர்பிறைச் சத்தமி, தேய்பிறை அட்டமி, மார்கழி மாத வளர்பிறைச் சதுர்த்தசி, தேய்பிறைச் சதுர்த்தசி, தை மாத வளர்பிறைத் திருதியை யென்னும் பதினன்கு திதிகள் கூடிய தினங்களாம்.

மார்கழி மாத வளர்பிறைச் சதுர்த்தசியானது, திருவாதிரை நட்சத்திரத்துடன் கூடிவந்தாலும், மாசி மாதந் தேய்பிறைச் சதுர்த்தசியானது செவ்வாய் ஞாயிறுகளுடன் கூடிவந்தாலும், அவ்வொரு சிவராத்திரி மற்றைச் சிவராத்திரிகள் மூன்று கோடிக்கிணையாம்.

மேற்கூறிய ஐவகைச் சிவராத்திரிகளிலும், விரதம் அநுட்டிப்பது நன்றும். அவ்விதமநுட்டிக்கமுடியாவிடின், அவற்றுள் வருடத்திலொருமுறைவருகிற, மகாசிவராத்திரியையாவது தவறுது அநுட்டிதல் வேண்டும்.

மேலும் இந்த சிவராத்திரி, உத்தமத்திலுத்தம சிவராத்திரி, உத்தம சிவராத்திரி, மத்திம சிவராத்திரி, அதம சிவராத்திரி என நான்கு வகைப்படும்.

1. உத்தமத்திலுத்தம சிவராத்திரியாவது :—சூரியன் அஸ்தமிக்கிற வரையில் திரயோதசியிலிருந்து அதற்குமேல் சதுர்த்தசி வந்து அது அவ்விரவும் மறுநாட் பகல் முழுவதுமிருப்பதாம்.

2. உத்தம சிவராத்திரியாவது :—சூரியன் அஸ்தமித்தபின் இரவு பத்து நாழிகைக்குள் சதுர்த்தசி வந்து கூடுவதாம்.

3. மத்திமசிவராத்திரியாவது:— காலை தொடங்கி மறுநாளுதயம் வரையுள்ள அறுபது நாழிகையும், சதுர்த்தசியும், சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்னதாக வருஞ் சதுர்த்தசியும், இரவு பத்து நாழிகைக்குப் பின்னர்வரும் சதுர்த்தசியுமாம்.

4. அதமசிவராத்திரியாவது:—இரவு இருபது நாழிகையளவும் சதுர்த்தசியிருந்து நீங்க, அதற்குப்பின் அமாவசை வந்து கூடுதலாம்.

5. அமாவாசை சம்பந்திக்கும் சதுர்த்தசி திரயோதசியுடனுவது சோமவாரத்துடனுவது திருவோண நக்ஷத்திரத்திலாவது வந்தால் அமாவாசை தோஷமில்லை.

இவ்வதம சிவராத்திரியில் பரமேஸ்வரரைப் பூஜிக்கலாகாது இவ்விதம் அமாவாசை கூடிய இராத்திரியில்வரும் சதுர்த்தசி உயிர் நீங்கிய சரீரம்போலாம். இந்த இராத்திரியில், பரமேஸ்வரரைப் பூஜிப்பவர், முன்னற் புரிந்துள்ள புண்ணியங்களை யிழந்து, பிரமஹத்திதோஷமுடையவராய், ரௌரவ முதலிய நரகங்களில்வீழ்ந்து வருந்துவர்.

ஆனதால் மேற்சொல்லியபடி சோமவாரம் முதலியன வல்லாத வாரங்களில், அமாவாசை கூடிய இரவில், சதுர்த்தசி வரின் அதனை நீக்கித் திரயோதசியுடன் சதுர்த்தசி ஒரு நாழிகையாவது கூடுகிற முதல்நாள் இராத்திரியிலேயே அநுட்டித்தல் வேண்டும்.

திரயோதசியும், சதுர்த்தசியுங்கூடிய இராத்திரியானது சிவலிங்க சொரூபமாகும்.

## சிவராத்திரி விரதம் அநுட்டிக்கும் முறை.

சிவராத்திரி தினத்துக்கு முந்தின தினத்தில், ஒருபொழுது ஆகாரமுண்டு, காமக்குரோத முதலியவற்றையொழித்து, ஆசாரமுடையவராயிருந்து, சிவ சிந்தனையுடன் பொழுதுபோக்கி, இரவு சுத்தமான விடத்தில் நித்திரைசெய்து, சிவராத்திரியன்று விடியற் காலத்திலேயெழுந்து, புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து,

காலை அநுட்டானம் சிவபூஜை என்பவற்றை முடித்துக்கொண்டு, சிவாலய தரிசனஞ்செய்து வீட்டிற்கு வந்து, இழிகுலத்தோர், பாதகர், என்பவர்களைப் பாராமலும், அவர்களிடம் நெருங்காமலு மிருந்து பரமேஸ்வரரைப் பூசிக்கும் பூசாஸ்தானத்தைக் கோமயத்தால் மெழுகி பொன்னுடையையும், பட்டாடையையும் மேற்கட்டியாகக்கட்டி, வாழை, கரும்பு முதலியவற்றையுங்கட்டி தோரணங்களையும், மலர்மாலைகளையுந்தூக்கி அலங்கரித்தல் வேண்டும்.

பின்னர், மத்தியானத்தில் ஸ்நானஞ்செய்து அநுட்டான முடித்துப் பூசைக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் சேகரித்து, சூரியன் அஸ்தமிக்கும்பொழுது, சிவாலயத்துக்குச் சமர்ப்பிக்க வேண்டிய பொருள்களைக் கொடுத்து விட்டு, வீட்டிற்கு வந்து மாலையில் ஸ்நானஞ்செய்து அநுட்டானமுடித்துப் பூசாமண்டபத்தில் பரமேஸ்வரரைப் பீடத்தில் எழுந்தருளச்செய்து விதிப்படி நான்குயாமத்தினும் பூசித்தல் வேண்டும்.

## அபிஷேக அலங்கார அர்ச்சனை விதிகள்.

பூசிப்பதில், பால், தயிர், தேன், சர்க்கரை, இளநீர், பன்னீர், எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், சந்தனம், விபூதி முதலியவைகளில் கிடைத்தவைகளை, நான்குயாமத்திலும் அபிஷேகிப்பதோடு, தவறாது முதற்சாமத்தில் பஞ்சகவ்வியத்தாலும், இரண்டாஞ்சாமத்தில் பஞ்சாமிர்தத்தாலும், மூன்றாஞ்சாமத்தில் தேனாலும், நான்காஞ்சாமத்தில் கருப்பஞ்சாற்றாலும் அபிஷேகம் செய்தல் வேண்டும். பால், தயிர், நெய், கோசலம், கோமயம் இவ்வைந்துங் கலந்தது பஞ்சகவ்வியமெனவும், தேன், சர்க்கரை, தயிர், பால், நெய் இவ்வைந்துங்கலந்தது ரசபஞ்சாமிர்தமெனவும், இவற்றில் பாலையும் தயிரையும் நீக்கி வாழைப்பழத்தையும், தேங்காய்த் துருவலையும் சேர்த்துக்கொள்ளுதல் பழ பஞ்சாமிர்தமெனவும் கூறப்பெறும்.

பின்னர் முதற்சாமத்தில் அகிற்குழம்புடன் வில்வமும், இரண்டாஞ்சாமத்தில் சந்தனத்துடன் தாமரை மலரும், மூன்றுஞ்சாமத்தில் அறைத்த பச்சைக் கற்பூரத்துடன் ஜாதிமுல்லை, பிச்சிமலரும், நான்காம் சாமத்தில் அரைத்த குங்குமப்பூவுடன் நந்தியாவர்த்தன மலரும் சாத்தல்வேண்டும்.

பின்னர் முதற்சாமத்தில் தாமரை மலராலும், இரண்டாஞ்சாமத்தில் வெண்துளசியாலும், மூன்றுஞ் சாமத்தில் முக்கிளை பொருந்தியவில்வத்தாலும், நான்காஞ்சாமத்தில் நீலோர்ப்பலமலராலும் அர்ச்சனைபுரிதல்வேண்டும். முதற்சாமத்தில் பருப்புப் பொங்கலும், இரண்டாஞ்சாமத்தில் பாயஸமும், மூன்றுஞ் சாமத்தில் எள்ளன்னமும். நான்காஞ் சாமத்தில் சுத்தான்னமும் நிவேதித்தல் வேண்டும். அது முடியாதாயின் நான்குயாமத்துக்கும் சுத்தான்னமே நிவேதித்திடுக. இப்படி நிவேதித்த பின்னர் ஒவ்வொரு யாமத்திலும் தூப தீப ஆராதனைகளைக் கிரமமாகச் செய்தல்வேண்டும். திராவிடவேதமாகிய தேவார திருவாசகங்களைப் பக்தி சிரத்தையுடன் ஓதிக்கொள்க. பின்னர் அஞ்சலி கூப்பித் துதித்து அர்க்கியங்கொடுத்து, அஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, அடியேன் செய்த இப்பூசனையைத் திருவுள்ளமேற்று அருள்புரியவெனச் சிந்தித்துப் பிரார்த்தித்துப் பூசையைப் பூர்த்திசெய்தல்வேண்டும்.

சிவ பூசையில்லாதவர்கள் தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளையே பாராயணஞ்செய்து நான்குயாமத்தும் விழித்திருந்து பாராயணஞ்செய்தல் ஆவசியகமாம்.

## பாரணவிதி.

இப்படி நான்கு யாமத்தினும் நித்திரையின்றிப் பூசனையியற்றி, மறுநாள் விடியற்காலையில் ஸ்நானஞ்செய்து, காலையநுட்டானமியற்றி, மத்தியாநநுட்டான முடித்துக்கொண்டு, தமது தீக்ஷாகுருவையும், ஆதிசைவர்களையும் வழிபட்டு ஆடையையும், ஆகாரத்திற்குரிய பொருள்களையும் கொடுத்து உபசரித்து, அவர்

களது ஆசிர்வாதம் பெற்று, காலை ஆறு நாழிகைக்குள்ளாகப் பாரணஞ்செய்தல் வேண்டும்.

பசிதாங்கவியலாதவர் லிங்கோற்பவ காலத்துக்குப்பின் சிறிது ஜலமாவது, பாலாவது, பழமாவது உட்கொள்ளலாம். இவற்றுள் ஜலம் உத்தமம், பால் மத்திமம், பழம் அதமம், தோசை முதலியன அதமாதமமாம்.

இவ்விதமிருந்து புசிப்பதற்கு சக்தியற்ற வயோதிகர், வியாதியாளர், ஸ்திரீகள், ஊணுறக்கமின்றி நான்கு யாமத்திலும் சிவபுராணம் கேட்டும், பஞ்சாக்ஷர ஜெபம்செய்தும், சிவாலய தெரிசனஞ் செய்தும், அவ்விரவை அகற்றி மற்றநாள் விதிப்படி பாரணஞ் செய்தல்வேண்டும். அதன்பின் சிவபுராணங்களைப் படித்தேனும், கேட்டேனும் நித்திரையின்றிப் பகற்பொழுதைப் போக்கிச் சாயங்கால அநுட்டானஞ்செய்து அவ்விரவிலும் அன்னபானாதிகளின்றிப் புனித ஸ்தானத்திலே ஆசாரத்துடன் நித்திரைசெய்தல்வேண்டும்.

பாரணத்தின் பின் நித்திரைசெய்பவர் பிரமஹத்தி தோஷத்திற்குள்ளாவார்.

ஒருக்கால் விழித்திருக்கும் சக்தியில்லாமையால் நித்திரை செய்துவிடின், விதிப்படி ஓமம்செய்து அந்த தோஷத்தைப் பரிகரித்துக்கொள்ளுதல்வேண்டும்.

இப்படி இருபத்து நான்கு வருடம் இவ்விரதத்தை அநுட்டித்துப் பின், கோதானம், பூதானம் சொர்னதான முதலியவற்றைச் சிவாச்சாரியர்களுக்குக் கொடுத்து விரதத்தைப் பூர்த்திசெய்தல் வேண்டும்.

இம் முறையாக சிவராத்திரி விரதம் அநுட்டிப்போர், தாம் சிவகதியிற் செல்வதுமன்றித் தமக்கு முன்னுள்ள இருபத்தொரு தலைமுறையி னுள்ளவர்களையுந் தவராது முக்தியிற் சேர்ப்பது சத்தியமாம்.

இம்முறையாக விரதம் அநுட்டித்துப் பேறுபெற்றவர்கள் அரிபிரமேந்திராதி விண்ணுலகத்தவர்களும், இராமர், கிருஷ்ணர் கன்மாடபாதர் முதலிய பூவேந்தர்களும், பிறருமாவர்.

இவ்விரதத்தை விதித்தகாலங்களிலன்றி, விலக்கிய காலங்களில் அநுட்டிப்பவர் பூர்வ புண்ணியங்களை யிழந்து ரௌரவ முதலிய நரகங்களை அடைவரென்று சிவாகமங்களில் கூறியிருத்தலால் அதற்குரிய விதிகளையும், விலக்குகளையும், குறிக்கும் சிவாகம வசனங்களுட் சிலவற்றை இங்கு குறிப்பிடுகின்றோம்.

## விதி வாக்கியங்கள்.



1. [ஆகமாந்தரே] திரயோதசீசஸம்பூர்ணு யாமமாத்ரம் சதுர்த்தசீ ஸாராத்ரி சிவராத்திரி ஸ்யாத் தத்ராத்ரௌ சிவமர்ச்சயேத்.

[ஆகமாந்திரத்தில்] திரயோதசி சூர்யோதய முதல் அந்த ராத்திரி மூன்ருவது யாமம் முடிகிற பரியந்தமும், அதற்குமேல் ஒரு யாம மட்டும் சதுர்த்தசியும், எந்த ராத்திரியில் வருகிறதோ அதுவே சிவராத்திரி எனப்படும். அந்த ராத்திரியிலே சிவபெருமானை அருச்சிக்கவேண்டும்.

2. [விஜயே] ராத்ராவஷ்டமபாகஸ்த திரயோதஸ்யாம்சதுர்த்தசீ மிஸ்ரிதா யதிஸா சிரேஷ்டா சிவராத்ரி வராநநே.

[விஜயாகமத்தில்] இரவு எட்டாவது யாமத்திலிருக்கிற திரயோதசியில் சதுர்த்தசி கூடினல் அந்த ராத்திரியானது மேன்மையான சிவராத்திரியென்று சொல்லப்படும்.

3. [காமிகே] பூர்ணுத்ரயோதசீராத்ரௌ கலாமாத்ரம் சதுர்த்தசீ ஸாராத்ரி சிவராத்ரிஸ்யாத் பூஜாயாமுத்தமோத்தமா.

[காமிகாகமத்தில்] சூரியோதய முதல் இரவு திரயோதசியிருந்து, அதற்குமேல் ஒருகலையளவு சதுர்த்தசி வந்து கூடினுலும் அந்த இரவு சிவராத்திரியாகும்.

# விலக்கு வாக்கியங்கள்.

1. [சந்தானே] சதுர்த்தசீ ரஜந்யாந்து ஸம்க்ராகமலேக்ஷண.
கலாமாத்ரம் * ஸிநீவாலீ ஸாராத்ரி கர்மநாசிநீ.

(சந்தானகமத்தில்) இரவு சதுர்த்தசியும் கலாமாத்ரம் அமாவாசையும் கூடுகிற தினமானது கர்மநாசத்தை விளைவிக்கும்.

2. (வாதுளே) அமாயோக சதுர்தச்யாம் நகுர்வீத சிவார்ச்சநம் ரமாதாத் குரு தேவத்ஸ கர்மவித்வம் சஹேதுகம்.

(வாதுளாகமத்தில்) அமாவாசைகூடிய சதுர்த்தசியில் சிவார்ச்சனஞ்செய்தல் கூடாது. மறந்து செய்தால் கர்மநாசத்துக்கு ஏதுவாகும்.

3. (சந்தானே) திரயோதச்யாம் சதுர்தச்யாம் நிசிமிஸ்ருதமுத்
சதுர்த்தசீத்வமா வித்தா பிராணஹாநிஞ்ச காரயேத். [தம்ம்
உஷச்சதுர்த்தசீ ராத்ரௌ சிவஸாயுஜ்ய காமிநீ,
அமாசதுர்த்தசீம் பூஜ்ய ரௌரவம் நரகம் வர்ஜேத்.

(சந்தானகமத்தில்) மகாநிசியில் (இராத்திரி $7\frac{1}{2}$-க்கு மேல் $22\frac{1}{2}$-நாழிகைக்குள்) திரயோதசியுடன் கூடிய சிவராத்திரி உத்தமம். சதுர்த்தசியோடு கூடிய அமாவாசையில் செய்யப்படும் பூசையானது பிராணஹானியை உண்டுபண்ணி, ரௌரவாதி நரகத்துன்பங்களையுங் கொடுக்கும்.

4. (காமிகே) ஹித்வாத்ரயோதசீ மிஸ்ராம் தர்சயுக்தாம் ப்ரகுர்
ஸாராத்ரிர்பயதர் பும்ஸாம் ந்ருபஸ்ய சலனம்பவேத். [வதே

(காமிகாகமத்தில்) திரயோதசியோடு கூடிய சதுர்த்தசியை விலக்கி, அமாவாசையோடு கூடிய சதுர்த்தசியில் பூசித்தால், பிரஜைகளுக்குப் பயத்தையும், அரசனுக்கு சலனத்தையும் உண்டு பண்ணும்.

* ஸிநீவாலீ—அமாவாசை.

5. (யோகஜே) சதுர்த்தசீத் வமாவித்தா ப்ராணஹீந சரீரவத்
சதுர்த்தசீ திதிசம்பூர்ணு, குஹூ ஸித்யா சமன்விதா
தத்ரஜாகரணம் ந்ருணும் ப்ரும்ஹஹத்யா சமம்பவேத்.

(யோகஜாகமத்தில்) அமாவாசையுடன் கூடிய சதுர்த்தசீ உயிர்நீங்கிய சரீரம்போலாம். அவ்விரவில் விழித்திருப்பவர் பிரமஹத்தி தோஷமடைவர்.

# திரயோதசி சதுர்த்தசிகளின் மேன்மை.



1. (ளிதே) த்ரயோதசீ சிவாமூர்த்திர் சிவதேஹம் சதுர்த்தசீ
தயோஸ்ஸமாகம: புண்ய:சிவயோகஸ் ஸஉச்யதே.

(லளிதாகமத்தில்) திரயோதசி அம்பிகையின் வடிவாயும், சதுர்த்தசி சிவவடிவாயுமிருத்தலால், அவ்விரண்டின் சேர்க்கை புண்யமான சிவயோகமாம்.

2. (சுப்ரபேதே) கௌரீ த்ரயோதசீ ஞ்யேயா சிவோஞ்யேயா
சதுர்த்தசீ, தயோஸ்து ஸங்கமேப்ராப்தே சிவராத்ரி
வ்ரதம்சரேத்.

(சுப்ரபேதாகமத்தில்) திரயோதசி கௌரியாகவும், சதுர்த்தசி சிவனுகவுமிருத்தலால், இவ்விரண்டும் சேருங்காலத்தில் சிவராத்திரி விரதமநுட்டிக்கவேண்டியது.

# விசேஷவிதி.



1- (சுப்ரபேதே) த்ரயோதச்யமயா யாச சம்மிச்ராச சதுர்த்தசீ
தத்தித்யாம் பூஜநம்சம்போ: குஹூயோகாத் பயாவஹா
தத்தோஷசமநார்த்தாயஹ்யகோரஸ்த்ரம்சதம்ஹூநேத்.

(சுப்ரபேதாகமத்தில்) திரயோதசி அமாவாசையுடன் கூடிய சதுர்த்தசியில் செய்யுஞ் சிவபூஜை, பயத்தைக் கொடுக்கக் கூடிய தாகையால், அந்த தோஷநிவர்த்திக்காக, அகோர, அஸ்திரமந்தி ரங்களால் நூறு ஆகுதி ஹோமஞ்செய்தல் வேண்டும்.

2. (உத்தரகாரணே) குஹூயுக்தம் கேவலம்வா மத்தியமம் பூஜயேச்சிவம், தத்தோஷ சமநார்த்தாய பஞ்சாஸ்த்ரைர் ஹோமயேத்தத: ப்ருதக் ப்ருதக் ஸஹஸ்ரஞ்சஹுத்வா பூஜாம் சமாசரேத்.

(உத்தரகாரணாகமத்தில்) திரயோதசி சம்பந்தமன்னியில் அமாவாசைமட்டும் சம்பந்தமுள்ள சதுர்த்தசி மத்தியம சிவராத்திரி யாகும். அமாவாசையின் தோஷநிவர்த்தியின் பொருட்டு பஞ்சாஸ்த்ரமந்திரங்களினால் தனித்தனி ஆயிரம் ஆவர்த்தி ஓமஞ் செய்து பின் சிவபூசை ஆரம்பிக்கவேண்டும்.

3. (சந்தானே ரஸாநுவித்த கநகம் சோத்யதே வஹ்நியோகத: ததாச்ரவண ஸம்யோகாத் அமாவித்தா விசுத்யதி.

(சந்தானகமத்தில்) ரசசம்பந்தமுற்ற சுவர்னம், அக்கினி யினால் சுத்தியடைதல்போல், அமாவாசை சம்பந்தமுற்ற சதுர்த் தசியும், திருவோணநக்ஷத்திர சம்பந்தத்தால் சுத்தியாகிறது.

## முடிவுரை.

---

மேற்கூறிய ஆகமவாக்கியங்களினால், திரயோதசியுடன்கூடிய சதுர்த்தசியே விசேஷமென்றும், அந்த சிவராத்திரியிலேயே சிவ பூசை செய்தல்வேண்டுமென்றும், ஓர் கால் திரயோதசியும், அமா வாசையுங்கூடிய சதுர்த்தசி வந்தால் அமாவாசை சம்பந்த தோஷ நிவர்த்திக்காக சொற்பப் பிராயச்சித்தஞ்செய்து, அநுஷ்டித்த

லும், திரயோதசி சம்பந்தமின்றி அமாவாசை சம்பந்தமான சதுர்த்தசிவந்தால், பிரபல பிராயச்சித்தஞ்செய்து அநுஷ்டித்தல் வேண்டுமென்றும் ஏற்படுதலால், நாளது விபவ-வருஷம் மாசி-மாதம் 26-தேதியில் வரும் சிவராத்திரியானது அமாவாசை சம்பந்தமான தோழமின்றி திரயோதசியுடன்கூடி வருவதால் அத்தினமே அநுட்டிக்கவேண்டிய நற்றினமாம்.

இச் சிவராத்திரி விரதாநுஷ்டானத்தால், மோக்ஷசாதனமான ஞானத்தையும், பின்பு அழியாத நித்தியானந்த சிவசாயுஜ்ய சாம்ராஜ்யத்தையும் அடைவரென்றும், இவ்விரதம் ஆசண்டாள பரியந்தமுள்ள எல்லா வருணத்தாரும் அநுஷ்டித்தல் ஆவசியகமென்றும், கூறியிருத்தலால் சிவநேசச செல்வர்களனைவரும் அவ்விரதத்துக்குரிய விதியை அநுசரித்தனுஷ்டித்து சிவானந்தப் பெருவாழ்வெய்துமாறு வேண்டுகின்றனம்.

சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தார்
தேவகோட்டை.

உ

சிவமயம்.

திருக்கயிலாயத்திலே

# ஸ்ரீசிவபெருமானிடம், நந்திதேவர்

பிரார்த்தித்துள்ள

# பதினாறு வரங்கள்.

மறைகணிந்தனை சைவநிந்தனை பொருமனமுந்
தறுகணம்புலன் களுக்கேவல் செய்யுருச் சதிரும்
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோடுறவும்.

யாது நல்லன்பர் கேட்கினு முதவுறு மியல்பும்
மாத வத்திஞே ரொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும்.

மனமும் வாக்குநின் னன்பர்பா லொருப்படு செயலுங்
கனவி லும்முன தடியருக் கன்பாங் கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்
புனித நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும்.

தீமை யாம்புரச் சமயங்க ளொழித்திடு திறனும்
வாய்மை யாகவே பிறர்பொருள் விழைவுறு வளனும்
ஏமு றும்பர தாரநச் சிடாதநன் ஞேன்புந்
தூய்மை நெஞ்சில்யா னெனதெனுஞ் செருக்குறுத் துறவும்.

துறக்க மீதுறைகினு நரகிற் ஞேய்கினும்
இறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும விவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.

இஃது, நித்திய பாராயணத்திற்குகந்தது.



"அட்சர லட்சம்" என்று தமிழுலகம் புகழப் பெற்ற
ஸ்ரீ கருணையானந்த ஞானபூபதிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# கீர்த்தனைப் புத்தகங்கள்.

தற்கால நவீன நாகரீக பார்ஸி வர்னமெட்டுகளமைந்த இராக தாளங்களுடன் பரமானந்தத்தைத் தரும் கீர்த்தனங்கள், தேகப் பரவசஞ் செய்யும் பல்லவிகள், கல்மனமும் கரைந்துருகக்கூடிய அநுபல்லவிகள், பத்திரசக்கடலைப்புகட்டி ஆனந்த பாஷ்பம் சொரியச்செய்யும் சரணங்கள், கெம்பீரமும்—சோகரசமும் பொருந்திய ஜாவளிகள், சொற்சுவை—பொருட்சுவை நிறைந்து ததும்பி, வாசிப்போர் உள்ளத்தை கொள்ளைகொண்டு, என்ன வாக்கு! என்ன அருமை! என்று வியக்கும் படியான விருத்தங்கள் முதலியவை நிறைந்திருக்கின்றன. ஒவ்வொரு பாடலையும் பாடுபவரும் கேட்பவர்களும் திடுக்கிட்டு அதிசயித்து மயிர்க் கூச்சலடைந்து ஆஹா!! பலே! பேஷ்! என்று சிரக்கம்பம் கரக்கம்பம் கொண்டு மெய்மறந்து பத்தி முத்தி அடையக்கூடிய விதமாக அமைந்துள்ளது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கந்தப்புகழ் | ... | ... | ... | ... | 0—2—0 |
| திருப்பாவணி | ... | ... | ... | ... | 0—2—0 |
| முருகப்புகழ் | ... | ... | ... | ... | 0—2—0 |
| தெய்வப்புகழ் | ... | ... | ... | ... | 0—2—0 |
| முருகர் தியானம் | ... | ... | ... | ... | 0—1—0 |
| காவடிக்காட்சி | ... | ... | ... | ... | 0—1—0 |
| தெட்சணமூர்த்தி பத்திரசக்கீதம் | | 1-ம் பாகம் | | ... | 0—1—0 |
| ஷெ | | 2-ம் பாகம் | | ... | 0—1—0 |
| ஷெ | | 3-ம் பாகம் | | ... | 0—1—0 |

நீங்கள் இதுவரையில் பார்த்திராத

## யோகாசனங்கள்.

யோகாப்பியாசிகளின் நன்மையை உத்தேசித்து வெகு அரும்பிரயாசையுடன் நமது ஞானபூபதிகள் அவர்களால் தயாரிக்கப்பெற்ற 47 யோகாசனங்கள். சீர்மை ரியல் ஆர்ட் பேப்பரில், பார்த்தவர் கண்ணைக்கவரும்படியாக மூன்று கலரில் வெகு அழகாகப் பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது. கண்ணாடி போட்டு வைத்துக் கொள்ளும் விதமாக 23 × 20 அளவில் தயாரிக்கப்பெற்றபெரியபடம்

விலை ரூபா 1.

முன் பணம் அனுப்பினல் ரிஜிஸ்தர் பார்சலில் அனுப்புவோம்.
வி. பி. யில் அனுப்ப முடியாது.

**M. A. நாவலர் அன்ட் சன்ஸ்,**
விஜயபுரம் P. O.,—தஞ்சாவூர் ஜில்லா.